# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 48 திருவள்ளுவர் ஆண்டு 2055 மே – 2024

## உள்ளே...

- நிலவியல்துறைக் கலைச்சொற்கள்
- நேப்பாளியில் தமிழ்
- தமிழ் தந்த தெய்வப் பெயர்கள் சில...
- திருக்குறளில் மோனைத் தொடை (தொடர்ச்சி)
- நீலம்
- திருக்குறளில் "பெள்" – சூழல் கருத்தாய்வு

50 ஆம் ஆண்டு பொன்விழா





# நிலவியல் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Abyssal | – | ஆழ்மட்டம் / ஆழிடம் |
| Acid rock | – | புளிமப் பாறை |
| Aquifer | – | நீர்ப்படுகை |
| Aquifuge | – | நீரூறுபாறை |
| Back waters | – | கடற்கழிமுகம் |
| Basalt | – | கரும்பாறை |
| Blow hole | – | ஊதுலைத் துளை |
| Chartography | – | நிலப்பட வரைவியல் |
| Confined water | – | பாறையிடை நீர் |
| Flag stones | – | பாவுக் கற்கள் |
| Fullers earth | – | உழை மண் |
| Geochronology | – | நிலக்கால ஆய்வியல் |
| Ice berg | – | பனிப்பாறை |
| Land slide | – | நில நகர்வு |
| Metallurgy | – | மாழையியல் |
| Miner | – | சுரங்கத் தொழிலாளி |
| Paleontology | - | தொல்லுயிரியல் |
| Physiography | – | நில அமைப்பியல் |
| Quick sand | – | புதை மணல் |
| Rock slide | – | பாறை நழுவல் |
| Seismology | – | நில அதிர்வியல் |
| Sink hole | – | புதைக்குழி |
| Stratigraphy | – | நில அடுக்கியல் |
| Stratum spring | – | படிவ ஊற்று |
| Toposheet | – | நில அமைப்புப்படம் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, மேழம் (சித்திரை)
மே – 2024



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

தமிழ்நாடு அரசு

தமிழ்வளர்ச்சித்துறை

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

50 ஆம் ஆண்டு பொன்விழா

"ஊழியம்செய் தமிழுக்குத் துறைதோறும்
துறைதோறும் உணர்ச்சி கொண்டே"

என்றார் பாவேந்தர் பாரதிதாசன். துறைதோறும் தாய்த்தமிழின் மேம்பாட்டுக்கு ஊழியம் செய்வது தமிழர்களாகிய நம் அனைவரின் கடமை. அதிலும் குறிப்பாக அகராதித்துறை வழியாக அருந்தமிழின் மேன்மைக்குத் தொண்டாற்றுவது தலையாயதாகிறது. காரணம், மொழிக்கு வளம் சேர்ப்பது அதன் சொற்களே. அந்தவகையில் ஆதித்தமிழின் அளவிடற்கரிய சொல்வளத்தைப் பதிந்து பாதுகாப்பது அகராதிகளே.

அத்தகைய சொற்கருவூலங்களான அகராதிகளைத் தமிழ்மொழியில் உருவாக்கிடும் பணியினைச் சிறப்புறச் செய்வதற்காக 1974 ஆம் ஆண்டு அன்றைய தமிழ்நாட்டின் மாண்புமிகு முதலமைச்சர் திரு. மு. கருணாநிதி அவர்களால் தொடங்கப்பெற்ற துறைத்தலைமை இயக்ககமே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககமாகும்.

மொழிஞாயிறு ஞா. தேவநேயப்பாவாணரை முதல் இயக்குநராகக் கொண்டு 08.05.1974 ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற அகரமுதலி இயக்ககம் இந்தாண்டு (08.05.2024) தன் பொன்விழா ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது. இந்த 50 ஆண்டுகளில் இவ்வியக்ககத்திற்கு நல்ல பல திட்டங்களையும், தேவையான நிதி உதவிகளையும் வழங்கி இதன் வளர்ச்சிக்கு முதன்மைத் துணையாக விளங்கிய அத்துணை மாண்புமிகு முதலமைச்சர் பெருமக்களுக்கும் முதற்கண் என் பணிவான நன்றியை உரித்தாக்குகிறேன்.

அதேபோல் இத்தனை ஆண்டுகளாக இவ்வியக்ககத்திற்கு உறுதுணையாக இருந்து வழிநடத்திய மாண்புமிகு துறை அமைச்சர்கள், அரசு செயலாளர்கள் உள்ளிட்டோருக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தப் பொன்னான பொன்விழா ஆண்டில் இந்த அகரமுதலி இயக்ககத்தின் இயக்குநராகவும், அதிலும் குறிப்பாக, முதல் பெண் இயக்குநராகவும் பொறுப்பேற்றுப் பணியாற்றும் வாய்ப்பு எல்லாம் வல்ல தமிழன்னையின் திருவருளாலே எமக்குக் கிட்டியதாகவே கருதிப் பெருமைகொள்கிறேன். இந்நேரத்தில்,எனக்கு முன்பாக இவ்வியக்ககத்தில் இயக்குநராக இருந்து,தமிழின் முன்னேற்றத்திற்குப் பங்காற்றிய அத்துணை நல்லுள்ளங்களுக்கும் என் வணக்கத்தை உரித்தாக்குகிறேன்.

அகரமுதலி இயக்ககம் பைந்தமிழ்ப் பணியில் பொன்விழாக் கண்டுள்ள இவ்வேளையிலும்கூட, ஒருசிலர் தத்தம் மேதைமையையும் இருப்பையும் வெளிக்காட்டும் முயற்சியில் இவ்வியக்ககச் செயற்பாடுகளில் குற்றம்கண்டு குறைமட்டுமே கூறுவது வருத்தமுறச் செய்கிறது. எனினும் இனிவரும் காலங்களில் அத்தகையோரும் குறைகூறுவதை விடுத்து, தம்மால் இயன்ற பணியினைத் தமிழுக்கு ஆற்றிட தமிழன்னை அருள்புரியட்டும்.

தாய்த்தமிழின் சொல்வளம் காக்கும் இந்த அரும்பணியினைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்கள், தொகுப்பாசிரியர்கள், பதிப்பாசிரியர்களுடன் இணைந்து செவ்வனே செய்ய இனிவரும் காலங்களிலும் அனைத்துத் தமிழன்பர்களும் ஒத்துழைப்பு நல்கிட அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

# நேப்பாளியில் தமிழ்



தமிழறிஞர் பேரா. ந. சஞ்சீவி

பாரதநாட்டின் திருமுடியென விளங்கும் பெருமை ஒரு வகையில் நேப்பாளத்திற்கும், திருவடியென விளங்கும் பெருமை தமிழ் நாட்டிற்கும் உண்டு. புவியியல் வகையில் இத்தகு இணைப்பைப் பெற்றுள்ள இவ்விரு நாடுகட்கும் இடையே உள்ள மொழியியலுறவைச் சிறப்பாக நினைவு கூற எழுந்ததே இக்கட்டுரை.

தென்னகத்துடன் இத்தகு தொடர்புடைய நேப்பாளத்தின் மொழியாகிய நேப்பாளியின் முதற்பெருஞ்சொற் களஞ்சியம் 1930–ஆம் ஆண்டில் வெளிவந்தது. அதன் ஆசிரியர் பேராசிரியர் டர்னர் (R. L. Turner). ஏறத்தாழ ஆயிரம் பக்கங்கள் கொண்ட இச்சொற்களஞ்சியம் பல வகைகளிலும் எடுத்துக்காட்டானதொரு சொற்களஞ்சியமாய்த் திகழும் பெருமை சான்றது. இச்சொற்களஞ்சியத்தில் உள்ள இருபத்தாறாயிரம் நேப்பாளிச் சொற்களும் அவற்றிற்குரிய தேவநாகரி எழுத்திலும் ஆங்கில எழுத்திலும் தரப்பட்டுள்ளன. அவற்றிற்குரிய பொருள் ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ளது. பெரும்பாலும் ஒவ்வொரு நேப்பாளிச் சொல்லின் வேர் பற்றிய ஆய்வும் அச்சொல்லிற்குரிய ஒப்புச் சொற்களும் காட்டப்பட்டுள்ளன.

"நேப்பாளி ஒப்பியல் – பிறப்பியல் சொற்களஞ்சியம்' என்ற பெயருக்கு ஏற்ற பெருமைசான்ற இப்பெருநூலைப் பேராசிரியர் டர்னர் பதினாறாண்டுகள் பாடுபட்டு உருவாக்கியுள்ளார்." இப்பெரும் படைப்புக் கருக்கொண்ட இடம் அல்மோராவின் (Al–mora) கூர்க்காக் கோட்டையின் அடிவாரம்!" பேராசிரியர் டர்னர் கடும்போர்ப்பணியில் ஈடுபட்டிருந்த காலம் இச்சொற்களஞ்சியம் சூல் கொண்ட காலம்."

நேப்பாளியில் வழங்கும் தமிழ் வேருடைய சொற்கள் சிலவற்றின் அகர வரிசை வருவாறு:

| நேப்பாளிச் சொல் | பொருள் | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| ஒக்லி | உலக்கை | உலக்கை |
| கர் | கட்டி, கழலை | கழலை |
| காலோ | கறுப்பு | கார்* |
| காஜல் | (கண்ணுக்கிடும்) மை | கருமை* |
| குட்நு | அடி, நொறுக்கு, | குட்டு; கொட்டு |
| கெர்நு | சுற்றல், சுழலல் | கிறுகிறுப்பு |
| சஙர் | படிக்கட்டு | சங்கடம் (= ஒடுக்க வழி. இப்பொருளில் யாழ்ப்பாணத்தில் வழங்குகிறது.) |
| சிலோ | மாணவர் | சில, சிறு* |
| சுருட் | சுருட்டு; சுருட்டுக் குடியன். | சுருட்டு* |
| டண்டா | குளிர்ந்த | தண்(மை)* |
| தல் | தாளம் | தாளம் * |
| தாரோ | தாடை | தாள்; தாடை |
| தாலோ | தாழ்ப்பாள் | தாழ்; தாள் |
| போல்நு | பேசு | வகுளி; வகுணி* (= ஒலி) |
| பௌரநு | மிக, நீந்து | தேலு(தல்); தேறு(தல்)* |
| மார்நு | தேய்; அடி; சுருட்டு | மண்; மண்ணு(தல்)* |
| மிசிநு | தேய்; அழுத்து;பிழி. | மின்? * |
| முஸல் | உலக்கை; உலக்கை நுனி; மா(வு) | மசி |
| யுஜார்நு | அழி | * சரி? |
| ஜர்நு | பொருத்து | சடை(தல்) |
| ஜரி | மழைபொழிதல் | சொரி? * |
| ஹலிநு | அலைத்தல் | அலை |
| ஹலுகொ | மெல்லிய | அலை * |
| ஹெர்நு | பார்; காண் | பார்? * |

பேராசிரியர் டர்னர் நேப்பாளிச் சொற்கட்கு வேர்ச்சொல் விளக்கம் காட்ட வழங்கும் திராவிடச் சொற்களென பிராகுவி (4), கன்னடம் (27), கோண்டி (5), கூய் (1), குருக் (5), மலையாளம் (1), தமிழ் (16), தெலுங்கு (19), தொதுவர் மொழி (2), துளு (1) ஆகிய மொழிச்சொற்களைத் தனித்தனியே பட்டியலிட்டுத் தந்துள்ளார். அப்பட்டியல்களை ஆய்ந்து எந்த நேப்பாளிச் சொல்லிற்கு எந்தெந்தத் திராவிட மொழிச் சொற்கள் ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளன என்பது எளிதில் விளங்கும்பொருட்டுப் பின்வரும் பட்டியல் அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ்ச்சொற்கள் பல வடமொழியில் திரிந்து வழங்கும் திறமுணர இப்பட்டியல் துணைபுரிதல் கூடும். பேராசிரியர் டர்னர் காட்டாத திராவிட ஒப்புச் சொற்களும் இப்பட்டியலில் காட்டப்பட்டுள்ளன. அவற்றின்மேல் உடுக்குறி இடப்பட்டுள்ளது. தமிழ் தவிர பிற திராவிட மொழிச் சொற்களின் ஒலி வடிவைப் பேரளவு சரியாக உணரத்தும் வகையிலேயே தமிழ் வரிவடிவு தரப்பட்டுள்ளது. ஆயினும், தமிழ் எழுத்துகளைக் கொண்டே பிற மொழியொலிகளை எல்லாம் குறிக்கும் முறை இன்னும் பிறவாமை மறவாமைக்குரியது. பட்டியல் வருமாறு :

| | |
|---|---|
| ஒக்லி— | உலக்கை (தமிழ்) |
| | வாஸ்க் (தொதுவர் மொழி) |
| கர் — | கழலை (தமிழ்) |
| | கடுவு (தெலுங்கு) |
| | கட்டா ( ,, ) |
| | கட்டே ( ,, ) |
| காலோ— | கார் (தமிழ்)* |
| | கரா (தெலுங்கு) |
| | காடு (கன்னடம்) |
| | கோச |
| காஜல்— | ( ,, |
| குட்நு— | குட்டு (தமிழ்) |
| | கொட்டு ( ,, ) |
| | கொட்டு (தெலுங்கு) |
| | குடு (கன்னடம்) |
| | குட்டு ( ,, ) |

| | |
|---|---|
| | குடுர் (பிராகுவி) |
| | குரும் (கோண்டி) |
| | க்சாட் (குருக்கு) |
| கொர்நு— | கிறுகிறு (தமிழ்) |
| | கிரகிரா (தெலுங்கு) |
| | கிரி ( ,, ) |
| | கிட் (பிராகுவி) |
| | கிர்கிர் (குருக்கு) |
| சஙர்— | சங்கடம் (தமுழ் |
| | ஜங்கலா (துளு) |
| சிலோ— | சில (தமிழ்) |
| | சில்லர (கன்னடம்) |
| | சில்லு ( ,, ) |
| | சிறு ( ,, ) |
| சுருட்— | * சுருட்டு (தமிழ்) |
| | சுருட்டு (மலையாளம்) |
| டண்டா— | * தண்மை (தமிழ்) |
| | தடி (தெலுங்கு) |
| | தண் ( ,, ) |
| | தண்டி ( ,, ) |
| | தணிட் (தொதுவர் மொழி) |
| தல்— | தழும்பு (தமிழ்) |
| | * தட்டு ( ,, ) |
| | * தட்டு (தெலுங்கு) |
| | தட்டு (கன்னடம்) |
| தாரோ— | தாடை (தமிழ்) |
| | தாள் ( ,, ) |
| | தவடை ( ,, ) |
| | தவடா (தெலுங்கு) |
| | தவடெ (கன்னடம்) |
| போல்நு— | வகுளி (தமிழ்) |
| | * வகுணி ( ,, ) |
| | பொப்ப (தெலுங்கு) |
| | பகுளு (கன்னடம்) |
| | பொப்பே ( ,, ) |
| | பொகளு ( ,, ) |
| பௌரநு— | * தேலு தல் (தமிழ்) |

| | |
|---|---|
| | தேல் (தெலுங்கு) |
| | தேல் (கன்னடம்) |
| | தார் (பிராகுவி) |
| மார்நு— | மண் (தமிழ்) |
| | மாடு (கன்னடம்) |
| மிசிநு— | * மின் (தமிழ்) |
| | மிச்சு (தெலுங்கு) |
| | மிக்கி ( ,, ) |
| முஸல்— | * மசி (தமிழ்) |
| | மசெ (கன்னடம்) |
| | மசகு ( ,, ) |
| | மசிட் (கோண்டி) |
| | மசோல் ( ,, ) |
| | மஸ்மசர் (குருக்கு) |
| யுஜார்நு— | * ? சரி (தமிழ்) (= அழி) |
| | ஜட (கன்னடம்) |
| | ஜடெ (தெலுங்கு) |
| ஜர்நு— | சடை (தமிழ்) (= பொருத்து) |
| | ஜட்ட (கன்னடம்) |
| | ஜடி ( ,, ) |
| ஜரி— | * ? சொரி (தமிழ்) |
| | ஜிடி (கன்னடம்) |
| | ஜடி (தெலுங்கு) |
| ஹலிநு— | அலங்கு (தமிழ்) |
| | அலை ( ,, ) |
| | அலசு (தெலுங்கு) |
| | அலசு (கன்னடம்) |
| | அலகு ( ,, ) |
| | அலெ ( ,, ) |
| | அலுகு ( ,, ) |
| ஹலுகொ— | * அலை (தமிழ்) |
| | அலகனா (தெலுங்கு) |
| ஹொர்நு— | * ? பார் (தமிழ்) |
| | ஹிர் (பிராகுவி) |
| | ஹீர் (கோண்டி) |
| | ஏர் (குருக்கு) |
| | இர் ( ,, ) |

மேற்கண்ட பட்டியலில் உள்ள நேப்பாளிச் சொற்கள் பல தமிழ் வேருடையனவே என்று நாம் உணர பேராசிரியர் டர்னரே மேற்கோளாகக் காட்டும் பேராசிரியர் யூல் பிளாக் அவர்களின் கருத்துகள் சிலவற்றை மேலுள்ள பட்டியலில் உள்ள சொற்களின் அகர வரிசைகளைத் தழுவியே ஈண்டு முறைப்படுத்தியிருத்தல் பொருத்தமும் பயனும் உடையதாகும். அவ்வாறு முறைப்படுத்தப்பட்ட கருத்துகள் வருமாறு:

**ஒக்லி:**

'சோமா இலையை இடிக்கும் உரல் உலூக்கல (ரிக் வேதம் I, 28, 6). இது உலக்கை (தமிழ்), வஸ்க் (தொதுவர் தொதுவர் மொழி), ஒனகே (கன்னடம்) ஆகிய திராவிடச் சொற்களை நினைவூட்டுகிறது'.

**கர்:**

'சிறு உடல் நோய்கட்கும் அவர்கள் (ஆரியர்கள்) திராவிட மொழிச் சொற்களையே வழங்கியதாகத் தோன்றுகிறது. கண்ட (ஐத்திரேயம்) 'கட்டா', 'கடுவு' (தெலுங்கு), கட்டெ (கன்னடம்), 'கழலை' (தமிழ்), 'கட்டு' (தெலுங்கு) ஆகிய சொற்களும் ஒரே வேருடையனவே ஆகும்'.

**காலோ:**

**காஜல்:**

'கால' என்னும் பகுதியே கருமை என்ற பொருள் தரும். கன்னட – காடு, தெலுங்கு – கரா, 'கறுப்பாக்க' என்னும் பொருள் தரும் கன்னட 'கழ்கு', கரும்பொருளைக் குறிக்கும் கோண்டி – கோசோ, பொதுவாகத் திராவிட மொழிகட்குரிய 'கார்' ஆகிய சொற்களின் வேராக இருத்தல் வேண்டும். இதே சொற்குடும்பத்தைச் சார்ந்ததே கன்னட– காடிகெ, தெலுங்கு – கடிகெ. இச்சொற்கள் சமஸ்கிருதம் – கஜ்ஜல, இந்தி – காஜல், காலிக் ஆகிய சொற்களை நினை வூட்டும்.

**குட்னு:**

'பேராசிரியர் கிட்டல் குடு (கன்னடம்), குட்டு (கன்னடம், தமிழ்) கொட்டு (தெலுங்கு) ஆகியவற்றை ஒப்பிட்டுக்காட்டுகிறார். இதனுடன் அரிசி குற்றுதல் என்னும் பொருள் தரும் கொட்டு (கன்னடம், தெலுங்கு), 'நொறுக்கு' என்னும் பொருள் தரும் 'கோர்ஸ்', 'கோஸ்' (குருக்கு) ஆகிய சொற்களையும் சேர்த்துக் கொள்ளலாம்.'

**கெர்னு:**

'சுற்றளவு என்னும் பொருள் தரும் கேர் (இந்தி), மயக்கம் என்னும் பொருள் தரும் கிர்னீ (இந்தி), கெரீ (மராத்தி), கழல் என்னும் பொருள் தரும் கிர்த்தி (மராத்தி) கயிறுகளைச் சுற்றும் சக்கரம் என்னும் பொருள் தரும் கிரின் (இந்தி) போன்ற இன்னும் பல இதே வேருடைய சொற்கள், சுற்று என்னும் பொருள் தரும் 'கிரி' (தெலுங்கு) சுற்றாய், மயக்கமாய் என்னும் பொருள் தரும் 'கிரகிரா' (தெலுங்கு) ஆகிய சொற்களை நினைவூட்டுகின்றன. 'கிறு கிறு' என்னும் தமிழ்ச்சொல்லின் பொருளே இவற்றின் பொருளும். குருக் மொழியில் 'விரைவுறு' என்னும் பொருள் தரும் சொல் 'கிர்கிர்'; பிராகுவியில் 'உறக்கத்தால் கிறங்கு' என்னும் பொருள் தரும் சொல் 'கிட்'.

டண்டா:

'உரிச்சொற்களைப் பொறுத்த வரையில் பெரிதும் வழக்குடைய ஒரு சொல்லைப்பற்றி மட்டும் குறிப்பிட்டு அமைவேன். 'குளிர்ச்சி' என்னும் பொருள் தருவனவாய தண்ட் (மராத்தி), இந்தி, 'டண்டா' ஆகிய சொற்கள் உள்ளன. இவை 'குளிர்ச்சி' என்னும் பொருள் தரும் 'தண்' (தமிழ், கன்னடம்), தாண்ட் (தொதுவம்), ஈரம் என்னும் பொருள் தரும் தடி (தெலுங்கு, கன்னடம்) ஆகிய சொற்களின் வேரினும் வேறானவையாக இருக்கவே இயலாது. இச்சொல் திராவிட மூலம் உடையதாவதற்கு இவ்வேரினின்றும் எழுந்த திராவிடச்சொல் வடிவங்களின் வகை வளமும் மூக் கொலியின் மாறுதலுறும் பண்பும் பெருந்துணை புரிவனவாகும்.

'இச்சொல் குடியேற்ற நாட்டு ஆங்கிலத்திலும் குடி புகுந்துவிட்டது. 'மிளகுத் தண்ணீர்' என்பதில் உள்ள 'தண்ணீர்' என்பதற்குரிய பழம்பொருள் தண்ணிய (குளிர்ந்த) நீர் என்பதே ஆகும். இக் கூட்டுச் சொல்லில் உள்ள முதற்பகுதியைக் கடனாகப் பெற்றதன் பயனே இந்தி 'டண்டா'வும் சமஸ்கிருத 'நீரம்' என்ற சொல்லும்

தல்:

'நிருக்தத்தில் குறிக்கப்பெறும் வினைப்பொருளுடைய வேர் 'தட்'. இது 'அடி' என்னும் பொருள் உடைய 'தாளெட்தி' என்னும் பாலிச் சொல்லிலும் உள்ளது. அதர்வன வேதம் 'ஓர் அடி' என்னும் பொருளுடைய 'தாட' என்னும் சொல்லைப் பெற்றுள்ளது. இந்த சம்ஸ்கிருத 'தட்' என்னும் சொல்லுக்கு ஆரியத்தில் சிறந்த வேர்ச்சொல் ஏதும் இல்லை. மாறாக 'அடி' என்னும் பொருள் உடைய தட்டு (கன்னடம்– தமிழ் – தெலுங்கு) என்ற சொல்லும் 'எதிர்த்து அடி', என்னும் பொருளுடைய 'தட்டு' என்ற கன்னடச் சொல்லும் 'வடு' என்னும் பொருள் தரும் 'தழும்பு' என்ற தமிழ்ச் சொல்லும் ஒப்பிட்டு நோக்கற்குரியன'.

தாரோ:

'தாடியைக் குறிக்கும் தாதிக (மனு), தாடி (இந்தி) ஆகிய சொற்கள் 'தம்ஷ்ட்ர' என்ற வேர்ச்சொல் உடையன என்பதை ஒலியியல் வகையாலோ சொல்லியல் வகையாலோ எளிதில் விளக்க இயலவில்லை. ஆனால், அச் சொற்கள் தாடைக்குரிய தமிழ்ச்சொற்களாகிய தாள், தாடை, தவடை ஆகியவற்றையும் தவடெ (கன்னடம்) தவடா (தெலுங்கு) ஆகியவற்றையும் நினைவுறுத்துகின்றன.

போல்னோ:

'பலர்' விழை பண்பும் அதனால் உணர்ச்சி விளக்கமார் பண்பும் பெற்றுள்ள சரிநுட்பக் காரணங்களால் பற்றியே அண்மைக் காலத்தில் திராவிடத்திலிருந்து கடன் வாங்கப்பட்ட உரிச்சொற்களும் வினைச் சொற்களும் உள என்று நான் நம்புகிறேன். 'அவ்வாறு கடன்கொண்ட வேர்ச்சொற்களுள் ஒன்று 'பேச' என்னும் பொருளுடைய 'போல்' என்பதாகும். இச் சொல் திவ்வியாவனத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதைப் 'ப்ரு' என்னும் வேருடையதென விளக்க யான் தயங்குகிறேன். ஆனால், 'போல்', என்னும் சொல்லோடு ஒலி என்னும் பொருளுடைய 'வகுளி' (தமிழ்) 'பகுளு' 'பொகளு'

(கன்னடம்) ஆகிய சொற்களையும் 'பொப்பெ' (கன்னடம்) 'பொப்ப' (தெலுங்கு) ஆகிய சொற்களையுங் கூட ஒப்பிடலாம்.'

பௌரனு:

'புதிய மொழிகளில் அசைவு அல்லது பெயர்ச்சியைச் சுட்டும் சில வினைச்சொற்கள் உள்ளன. 'நீந்து, மித' என்னும் பொருள் தரும் தைர்னா (இந்தி) என்னும் சொல்லுக்குத் தர், திர் ஆகியன வேர்ச்சொற்களாக இருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால், 'தேல்' (கன்னடம், தெலுங்கு), தார் (பிராகுவி) ஆகிய சொற்கள் நினைவுக்கு வருகின்றன.'

மார்னு:

'பாரதம், பாலியில் உள்ள 'மண்டயதி' என்னும் சொல்லுக்கும் 'செய்ய' என்னும் பொருள் தரும் 'மாடு'(கன்னடம்), 'அணிசெய், மெருகிடு' என்னும் பொருள் தரும் 'மண்' (தமிழ்), 'அணி செய்' என்னும் பொருள் தரும் 'மேஜ்' (கூய்), வீடு என்னும் பொருள் தரும் 'மாடம்' (தமிழ்), 'மாளிகை' (தெலுங்கு) ஆகிய சொற்கட்கும் பொதுவானதொரு வேர் உண்டு என்றே நான் கருதுகிறேன்.'

மிசினு:

'மீனைக் குறிக்கும் பழைய ஆரியச் சொல் 'மத்ஸ்ய' என்பதே. அமரத்திலும் மனுவிலும் 'மீன' என்ற சொல் இருக்கிறது. ஆனால், நமக்குத் தெரிந்த வரையில் பாலியில் இல்லை. இது மீன் (தமிழ், கன்னடம், கோண்டி), மீனு (கூய்) ஆகும்

முஸல்:

'இது வரை நாம் பார்த்த வடமொழிச் சொற்களுடன் திராவிட மூலம் காணக்கூடிய எச்சொல்லும் வேதத்தைச் சார்ந்ததாய் இல்லை. ஆனால், அதற்கு ஒரு சான்றைத் தானியங்களை மாவாக்கும் கலை நமக்கு வழங்கும் என்று கருதுகிறேன். உலக்கையைச் சுட்டும் அதர்வ மறை – பாலிச் சொல்லாகிய 'முஸலா'வில் உகரத்தை ஸகரம் தொடர்வதாலும் இலகரம் உண்மையாலும் பலரறிந்த சொல்லாகும். இச்சொல்லைப் பேராசிரியர் வாக்கார்நகல் அதர்வ மறை" 23, 8. மஷ்மஷாகரம் என்ற சொல்லோடும் ஒப்பிடுகிறார். ஆரியத்தில் 'நசுக்கு' என்னும் பொருள் தரும் 'மஸ்' அல்லது 'ம்ர்ஷ்' என்னும் பழைய வேர்ச்சொல் ஏதும் இல்லை. மாறாகத் 'தேய், அரை, மெரு கிடு, கூராக்கு' என்னும் பொருள் தரும் 'மசெ', 'மசகு' (கன்னடம்), கோது, தேய் என்னும் பொருள் தரும் 'மசம சார்' (குருக்கு), சாணைக்கல் என்னும் பொருள் தரும் 'மசோல்' (கோண்டி) என்னும் சொற்கள் உள. நசுக்கு என்னும் பொருள் தரும் மசல்னா (இந்தி) திராவிடத்தி னின்றும் நேரே ஆரியத்தில் குடி புகுந்திருத்தல் கூடும்.

**ஹலிநு, ஹலுகா :**

'கிளர்ச்சியுறு' என்னும் பொருள் தரும் ஹில்னா (இந்தி), ஹல்ணே (மராத்தி), ஹால்வு (குசராத்தி), போக என்னும் பொருள் தரும் ஹல்னு (சம்ஸ்கிருதம்), உலுக்கு என்னும் பொருள் தரும் ஹல்னா (பிரிஜி), ஹால்னா (இந்தி,) அலராவுன் (காஷ்மிரி) ஆகிய சொற்களின் சுற்றமாய சொற்கள் பல உள. எடையற்ற என்னும் பொருள் தரும் ஹலூ ஹல்கா (இந்தி) சொற்களும் இங்குச் சேர்த்து எண்ணத்தக்கன. அவ்வாறே அலை என்னும் பொருள் தரும் ஹல்கா, ஹில்க், கில்கோரா ஆகிய பெயர்களும் கருதத்தக்கன. திராவிடத்தில் 'கிளர்ச்சி செய்' என்னும் பொருள் தரும் வினைச்சொற்கள் பலவுள. அவை அலெ (கன்னடம்), அலை (தமிழ்), அலுகு (கன்னடம்), அலங்கு (தெலுங்கு) அசைக்க என்னும் பொருள்தரும் அலகு, அலசு (கன்னடம்) தொந்தரை தருதல் என்னும் பொருள்தரும் அலசு (தெலுங்கு) ஒளி, நிறை, புலமை ஆகிய பொருள்தரும் அலக்கனா (தெலுங்கு), சுறுசுறுப்பு அல்லது விரைவு என்னும் பொருள்தரும் எலகி (கூய்), அலை என்னும் பொருள்தரும் 'அலா' (தெலுங்கு) அலெ (கன்னடம்), அலை (தமிழ்) ஆகிய சொற்கள் கருதத்தக்கன.'

**ஹெர்நு :**

'பிராகிருதத்திலும் இக்கால இந்தோ ஆரியத்திலும் 'பார்க்க' என்னும் பொருள் தரும் 'ஹெர்' என்னும் வேர் இருக்கக் காண்கிறோம். இது ஹிர் (பிராகு), ஏர் (குருக்கு), ஹீர் (கோண்டி), இரு (தெலுங்கு) ஆகிய வடதிராவிடப் பேச்சுகளில் இருக்கக் காண்கிறோம்,'

இவ்வாறு பேராசிரியர் பிளாக் விளக்கும் கருத்துகளால் தெளிவாகும் உண்மை ஒன்று உண்டு. அது மேற்படி சொற்கள் திராவிடக் கடன் சொற்களே என அவர் துணிவதன் தலைமைக் காரணம் அச்சொற்கட்கு வடவாரிய மொழிகளில் சரியான வேர்ச்சொல் இன்மையும் மாறாகத் திராவிட மொழிகளில் ஏற்ற வேர்ச் சொற்களும் ஒப்புச் சொற்களும் உண்மையுமே ஆகும்

மேலுள்ள பட்டியலைக் கண்டோர் கருத்திற்கொள்ளத் தக்க குறிப்புகள் சிலவுள. அவையாவன ;

1. பேராசிரியர் டர்னர் மேற்கண்ட நேப்பாளிச் சொற்கள் தமிழ் வேருடையன என்று கருதுவதன் காரணம் பெரும்பகுதி அச்சொற்கள் பற்றிப் பேராசிரியர் யூல் பிளாக் அவர்கள் அந்த நேப்பாளிச் சொற்கட்கு வடவாரிய மொழி களில் தக்க வேர்ச் சொற்கள் இன்மையாலும் மாறாகத் திராவிட ஒப்புச் சொற்கள் உண்மையாலும் அவ்வாறு செய்த முடிவுகளே ஆகும்.

2. நேப்பாளியில் வழங்கும் இத்தமிழ்ச் சொற்கள் வேறு பல வடவாரிய மொழிகளுள்ளும் வழங்குவதையும் இத்தமிழ்ச் சொற்கள் பலவற்றின் திராவிட ஒப்புச் சொற்களையும் பேராசிரியர் டர்னரின் சொற்களஞ்சியம் விளக்குகிறது.

3. மேற்காட்டிய நேப்பாளியில் வழங்கும் தமிழ் வேருடைய சொற்களின் கூட்டுச் சொற்கள் பல உள. அவை யாவும் மேற்காட்டிய பட்டியலில் இடம் பெற வில்லை.

4. தென்மொழிச் சொற்கள் (இக்கட்டுரையில் காட்டப் பட்டவையும் பிறவும்) வடவாரிய மொழிகளில் திரிந்து வழங்கும் திறம் அடிக்குறிப்புகள் 15, 16–இல் குறிப்பிடப்படும் நூல்களால் விளங்கும்.

5. * இக்குறி பெற்ற தமிழ் வேர்ச்சொற்கள் பேராசிரியர் டர்னரால் தமிழ் மூலச் சொற்களாகக் காட்டப்படாதவை. ஆயினும், ஏற்ற தமிழ் வேர்ச்சொற்கள் இவையாயிருக்கலாம்.

6. *இக்குறி பெற்ற நேப்பாளிச் சொல் திராவிடக் கடன் சொல்லாகப் பேராசிரியர் டர்னரால் காட்டப்பட வில்லை. ஆயினும், அது திராவிடக்கடன் சொல்லாக இருத்தல் கூடும். இது போன்ற இன்னும் கண்டு பிடிக்கப் படாத திராவிடக் கடன் சொற்கள் வேறு பலவும் ஆரிய மொழிகளில் இருத்தல் கூடும்.

7. மேற்போக்காகக் காணும்போது வடமொழிச் சொற்களாய்த் தோற்றமளிப்பன பல ஆராயுமிடத்து உண்மை யில் தென்மொழிச் சொற்களாகவே திகழ்கின்றன.

8. நேப்பாளியில் தமிழ்ச்சொற்களைக் காண்பது ஆரிய மொழிகளில் ஆயிரத்துக்குக் குறையாதுள்ள திராவிடச் சொற்களை இனங்கண்டுகொள்ளும் இன்பப் பெருமுயற்சியின் ஒரு சிறு கூறே ஆகும்.

9. ஆரிய மொழிகளில் திராவிடக் கடன் சொற்களைக் கண்டு காட்டும் முயற்சியின் வெற்றி ஆரிய திராவிட மொழிப் புலமையோடு கூடிய நடுவு சார்ந்த நன்னெஞ்சங்களைப் பொறுத்தே உள்ளது.

10. உயர்வு தாழ்வு மனநிலையும் விருப்பு வெறுப்பு உளநிலையும் இன்றி ஒரு மொழியில் கலந்துள்ள பிற மொழிச் சொற்களை அறிந்து அறிவிப்பது மனிதகுல ஒருமைப்பாட்டிற்கு உறுதுணை புரியும்.

1961இல் வெளிவந்துள்ள திராவிடச்சொற் பிறப்பியற்களஞ்சியம் பேராசிரியர் டர்னர் முயற்சிக்குப்பின் முப்பத்துநான்கு ஆண்டுகளாக வளர்ந்து வந்துள்ள திராவிட மொழி ஆய்வின் (சிறப்பாகப் பேராசிரியர் பர்ரோ ஆரியத் தில் உள்ள பல நூறு திராவிடச் சொற்களை விளக்கியுள்ள மையின்) பயனாக விளங்கும் பெருமை படைத்தது. அந் நூலின் இறுதியில் பிறமொழிகளில் உள்ள திராவிடக் கடன் சொற்கள் மொழிவாரிப்பட்டியல்களில் முறைப்படுத்தப் பெற்றுள்ளது. அவற்றுள் நேப்பாளிச் சொற்களெனத் தரப்பட்டுள்ளவை மட்டும் நூறு. அவற்றை ஆய்வார் நேப்பாளி மொழியில் உள்ள தமிழ்க் கடன்சொற்களின் வகையையும் வளத்தையும் மேலும் விரிவாக அறிந்து இன்புறுவர்."

# தமிழ் தந்த தெய்வப் பெயர்கள் சில


இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர், மலேசியத்
தமிழ்நெறிக் கழகம் மலேசியா




தமிழரின் இறைமை சார்ந்த கருத்தியல்களை அவர்களின் நுட்பமான சொல்லாக்கங்களை ஆய்வதன்வழித் தெளிய உணர முடிகின்றது. இவை இயற்கையைத் தமிழ் அறிவர் ஆய்ந்ததன் விளைவாய் வெளிப்போந்த முடிபுகளாகும்.

மதம் சமயம் எனும் இரு சொற்களும் கழகக் காலத்தில் பயிலப்படாதவை. இருப்பினும் இவை தூய தமிழ்ச்சொற்களே.
மதம், பொருந்தல் கருத்தில் மதித்து ஏற்றல் பொருளில் வருவது. சமயமும் பொருந்துதல் பொருளில் அமைந்து நுட்பமாய், பழுனமுறுதல் கருத்தில் வருவது.

உல் = சேர்தல் கருத்து வேர்.
சேர்தலே பொருந்துதல் ஆகும்.

உல்> முல் > முள்> முள் + து> முட்டு
முட்டு> மட்டு = அளவு , மட்டம் = நிலை அளவு
மட்டிட்ட = அளவுக்குரிய

முட்டு = மோது,
முத்து = பொருந்துதல்

மென்மையாய்ப் பொருந்துதலை முத்துதல் என்றும் வன்மையாய்ப் பொருந்துதலை முட்டுதல் என்றும் பாவாணர் வேறுபடுத்திக் காட்டுவார்.
எ.கா: குத்து > குட்டு, முத்து> முட்டு, ஒத்து> ஒட்டு

மத்து = அளவு, மத்து> மத்தி> மதி = அளவிடல். மதிப்பீடு.
மதி = காலத்தை அளவிட்ட நிலா.
மதி = அளவிட்டு விற்பனை செய்யப்படும் பொருள். ஏற்றுமதி, இறக்குமதி.
அளவீடு எனும் பொருளில் மதிப்பிடல், மதித்தல் என மதி பலவாறு விரியும்.
இவ்வாறு மதியின் அடியாகவே மதம் விரிந்தது.
மதி > மதம் = மதித்து ஏற்றுக் கொண்ட கொள்கை என்றாகும்.
மதி> மதுகை = கொள்கை.

சமயம் எனுஞ் சொல்லின் நுண் வேரும் உல் என்பதே.
உல்> உம்> அம் = சேர்தல், பொருந்துதல்.

அம் > அமை = பொருத்து.
அம்>அமை> அமையம் = பொருந்திய நேரம்.
அம் > அமை> சமையல் = உண்ணுதற்குப் பொருந்தியவாறு ஆக்கப்படுதல்;
சமைதல் = பெண் பிள்ளைகள் பழுனமுற்றுப் பூப்பெய்துதல்..

அம்> அமை> அமையம்> சமையம் > சமயம் = பொருந்தி நேரம், செவ்வி, தெளிந்துணர்ந்த மனத்தைப் பண்படுத்தும் கொள்கை; இறைமை சார்ந்த நெறி.

இவ்வாறு மதம், சமயம் எனும் இரு சொற்களும் தெளிந்த நிலையில் பொருள் அமைவும் பெற்று விளங்குவதைப் பாவாணர் தம் தமிழர் மதம் எனும் நூலில் விரிவாய் விளங்கப்படுத்துவதைக் காணலாம்.

இந்நிலையில் மக்கள் அறிவு, நம்பிக்கை சார்ந்த கொள்கை நெறிகளையே இவை உணர்த்துகின்றன. இதனால் இறை ஏற்பில்லாமையையும் பாவாணர் கொள்கை எனும் பொருளில் நம்பா மதம் என்பார். இவ்வகை நம்பா மதங்கள் தமிழருள் நீண்ட காலமாக இருந்தவையே.

மாந்தனின் அறிவு நிலை வளர்ச்சிக்கு ஏற்ப அவனின் நம்பிக்கைகளும் மாறுபடுவது இயல்பு. அதுவே மாந்தவியல். அவை முதிரா நிலையாகவும் முதிர்ந்த நிலையாகவும் உள்ளன. முதிரா நிலையினின்று அறிவு வளர்ச்சிக்கு ஏற்ப முதிர் நிலைக்கு மாந்தப் பிடிப்புகள் மாறும்.

அச்சமே தொடக்கக் கால மாந்தனின் இறை நம்பிக்கை மூலமாக இருந்தது என்பது ஆய்வாளர் கருத்து. அவ்வச்சம் அறியாமையையும், அறியாமை அச்சத்தையும் விளைவிக்கும் என்பதும் இயல்பு. அறிவால் தேடலும் ஆய்தலும் கண்டறிதலுமே தெளிவுக்கும் கண்டுபிடிப்புகளுக்கும்

வழிவிட்டன எனலாம். அறிவுக்கான தேடலிலும் ஆய்விலும் பல்வகை வினாக்கள் எழும்புவதும் மாந்த இயற்கைப் பண்பு. இக்காலத்தும் குழந்தை முதலாக இயல்பூக்கமாகவே இத்தகு தேடலாய்வு நிகழும் என்பது உளவியல். இதுபற்றிய விரிவான விளக்கத்திற்கு நாம் செல்லவில்லை.

தமிழரின் தெய்வப் பெயர்கள் இத்தகு இயற்கை சார்ந்த தேடலிலும் ஆய்விலும் விளைந்தவை என்பதைச் சொல்லாய்வுப் பார்வையில் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம். குறிப்பிட்ட சில பெயர்களை மட்டும் தெரிந்தெடுத்து இங்குக் காட்டாகக் கொண்டு விளக்கம் செய்யலாம்.

1. தெய்வம்

உ> உல்>துல்> தெல்>தெய்> தேய்> தீய்> தீ

தொடுதலால் உரசலும் உரசலால் தேய்த்தலும் தேய்த்தலால் தீயும் ஆன கதையை மேற்கண்ட சொல்லாய்வு நிறுவுகின்றது.

பொருள்கள் ஒன்றோடொன்று பொருதினால்தான் உரசிடல் முடியும். உரசல் தேய்த்தலாகும்.. தேய்க்கத் தேய்க்கச் சூடேறி தீ உருவாகும் என்பது அறிவியல்...பண்டைய மாந்தர் கற்களையும், கோல்களையும் கொண்டு தேய்த்தும், உரசியும் இடித்தும் நெருப்புண்டாக்கினர் எனும் வரலாற்றினையும் இச்சொல் உணர்த்தும்.

சொல்லறிவியலும் அவ்வியற்கை அறிவியலையே உணர்த்துகின்றது. தேய்த்தலால் தீய் ஆகி, தீ ஒளி தருகின்றமையால் தேய் ஒளிப்பொருளுமானது. தமிழ் ஒளியாம் தேய்... மேலை மொழியில் சுடர்தரும் டேய் Day ஆகியது. ஒளியான Day ஆங்கிலத்தில் பகலையும் சுட்டி நிற்பதை நாம் அறிவோம்.

தக தக எனும் தமிழ்த்தொடரில் வரும் தக தேயிலிருந்து தோன்றியதாகலாம். தகதக தங்கத்திற்கு மூலம். தக தக வென மின்னுவது தங்கமாயிற்று. தக> தவ எனவும் மாறும். தீ தகதகவென எரிதலை வழக்கில் நாம் கண்டவர்தாமே.. எரிதல் போலும் துன்பத்தைத் தாங்குதலே தவமாயிற்று. தக> தவ> தவம். எரிதல் போல் நீர் விடாய் எடுப்பதால் தாகமும் ஆயிற்று. தகிப்பு, தவிப்பு முதலானவற்றுக்குத் தக மூலமானது. இறந்தாரை தீயிட்டு எரிப்பதைத் தகனம் என்கிறோம். எனவே தகத்திற்குத் தேய் மூலமானது. தேய்க்கு உகரமே வித்து.

தேயே தேவானது. தேவே தேவனையும் தேவியையும் தந்தது.

தேய்> தேவ்> தேவு
தேவு> தேவன்
தேவு> தேவி

தேயே தெய்வத்திற்கும் தாய். தேயால் தீ ஆனதால் தெய்வு + அம்= தெய்வம் உருவாகியது. தெய்வம் வானுறையும் தெய்வமாகிய கதிரவனைக் குறித்தது.

அம் பெருமைப் பின்னொட்டாகும். வானில் உறையும் தெய்வம் என்றது, வானில் உறையும் பெருந்தீ என்றே பொருளுணர்த்தும்.

விளக்கு என்பது சிறியது. விளக்கம் என்பது பெரியதாகும் . களங்கரை விளக்கம் என்றுதானே கூறுகிறோம். தெய்வு+ அம்= தெய்வம் ==> பெரிய தீ என்பதே இதன் பொருள். வானத்தில் இயங்கும் பெரிய தீக்கோளமாக இருப்பது சூரியனே. சூரியனையே நம் மக்கள் கண்கண்ட தெய்வம் என்றனர். உலகம் தோன்றிய காலத்திலிருந்து சூரியன் இருக்கின்றது. அது நிலைப்பாட்டின் அடையாளமாகும். உலக நலனுக்காகத் தம்மை ஈகப்படுத்தி வாழ்பவர் சுடர்விடும் நிலையான சூரியனைப் போல் கருதப்படுவர். அதனாற்றான் இத்தகையோர் தெய்வம் எனப் போற்றப்பட்டனர். இச்சொல் கதிரவனோடு தொடர்பு பட்டவாறு நிலைப்புப் பொருளில் வேறு வேறு பொருள்களையும் உணர்த்தி வந்துள்ளதைத் திருக்குறள் வழி அறிய முடிகின்றது.

தேய் ஒளியைச் சுட்டியதால் தேய்> தேஜ் என வடமொழி வடிவம் பெற்று தேஜஸ் ஆனது. உடல் ஒளியைத் தேய் வழி தேஜஸ் என்றது வடமொழி.

சேயோன், சிவன்

உல் > சுல் = வெப்பப் பொருள் வேர்.
சுல் > செல் > சேல் = செம்மைப் பொருள் வேர்.

வெப்பம் தீயை உருவாக்கும் மூல ஆற்றலாகும். தீ செந்நிறமாய்த் தோன்றும். எனவே வெப்பப் பொருள் மூலம் சிவப்பு நிறத்திற்கும் ஆகி வந்தது. அவ்வடிப்படையிலேயே சுல் > வெப்பப் பொருளினின்று செம்மைப் பொருளாய் ஆகி வந்தது என்பதைப் பொருத்தி உணர்தல் வேண்டும்.
செல் > செய் > செய்யான் = செந்நிறப் பூரான்
செய் > செய்யன் > செய்யான்

செய் > சேய் > சேயோன் = செந்நிறத்துச் சிவன்; முருகன்

சுல் > செல் > செம் > செம்மை
செம்மை > செவ்வை
சுல் >செல் > செம் > செவ் > செவப்பு > சிவப்பு
சிவ> சிவன் = செந்நிறத்தவன்.

சூரியன் ஒளியை நல்குவது. சூரிய ஒளி செந்நிறமாய்த் தோன்றுதலால் சூரியனுக்கே முதற்கண் செய்யோன் என்றும் சேயோன் என்றும் ஆகியது.

சேயோன் மேய மைவரை உலகம் எனும் தொல்காப்பிய வரி முருகனை முதற்பொருளாய்ச் சுட்டுவதாய்ப் பலரும் குறிப்பிட்டாலும் அதன் மூல முதன்மைப் பொருள் செந்நிற கதிரவனையே முதற்கண் சுட்டியது என்பதே மூல வரலாறு.

இலங்கம் > இலிங்கம்.

எல்லே இலக்கம் என்பது தொல்காப்பியம் ஆகும். இல்> எல் எனத் திரியும். உல் > சூரிய ஒளியினின்று வெப்பப் பொருளை உணர்த்துவது அறிந்ததே. அஃது ஒளிப் பொருளாயும் ஆகும். உல்>இல் > எல் எனத் திரிந்து கதிரவ ஒளியைச் சுட்டி நின்றது. இதன் கரணியமாகவே ,
எல் > எல்லி என்றும் எல்லவன் என்றும் எல்லோன் என்றும் கதிரவனைச் சுட்டி சொல்லாக்கம் விரிந்தது.

இல் > இலங்கு > இலங்கை = சூரிய ஒளிக்குத் தெற்கு புறத் தீவாய் விளங்குவது என்றும் பெருந்தரைக்குக் காட்டாய் விளங்குவது என்றும் இதன் பொருள்.
இல்> இலக்கு = ஒளியே தொலைவான இடங்களுக்குக் குறியீடாய் விளங்குகின்றமையால் குறியீட்டுப் பொருளில் இலக்கு அமைந்தது. இதுவே குறிக்கோளாயும் ஆகியது.
இலக்கு நோக்கிச் செல் எனும் தொடரை நோக்குக.

உயர் மலைகளிடையே கதிர் எழுவதால் , ஓங்கல் இடை வந்தது என்பர் முன்னோர். எனவே உயர் மலையும் கதிரும் போற்றுதற்குரிய குறியாகியது. மலையின் அடையாளமாகவே மலைபோல் அமைந்த கோபுரங்கள் மக்கள் வாழிடங்களில் அமைக்கப்பெற்றன. ஏனைய இடங்களில் கற்றூண்கள் அமைக்கப்பெற்று வணங்கப்பெற்றன. அக்கற்றூண்களே, ஒளிப்பொருளில் , இல் > இலங்கம் ஆயிற்று. இலங்கம்> இலிங்கம் எனத் திரிபாகியது. பின்னால் வேறு வேறு மெய்யியல் கருத்துகளும் இதற்கு இணைக்கப் பெற்றன.

மாயோன்

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையான் சொல்லவும் படுமே.
– தொல்காப்பியம்–பொருளதிகாரம்– அகத்திணை இயல்–பாடல் எண்:5

எனும் தொல்காப்பிய வரிகளில் வரும் மாயோன் எனும் முதற்பொருள், இயற்கை இயல் தன்மைக்கு ஏற்ப நுட்பமாய் ஆக்கம் பெற்ற சொல்லாகும்.

முல்லை நிலம் காடும் காடு சார் பகுதிகளாகும். நிலைத்திணைகள் அடர்ந்த இப்பகுதி அடவி என்றுஞ் சொல்லப்பெற்றது. காடு அடர்ந்த இப்பகுதி நீரோட்டமும் ஈரத்தன்மையும் மிகுந்திருக்கும்; இவ்வகை இயற்கை இயல்பு மழை முகில் தோற்றத்திற்கும் திரட்சிக்கும் கரணியமாய் விளங்கும். நீர் வெப்பமுற்று ஆவியாகி மழை முகிலாய் வளி மண்டலத்தில் திரள்கின்றது என்பதே அறிவியல். இம்மழை முகில் கரிய நிறமாய் விளங்கும். எனவே கருமைப் பொருளில் மழையும் கார் எனப்பட்டது.

உல் = கருமைப் பொருள் வேராகும். இது சேர்தல் பொருளை முதன்மையாய்க் கொண்ட கிளைக் கருத்தாகும். சேர்தலில் கலங்கல் ஏற்பட்டு கலங்குவது தெளிவற்றதாகித் தெளிவற்றதாகையால் சேர்தல் பொருளினின்று கலங்கல் எனும் கருமைப் பொருளாகியது.

உல் > முல் > மல் = கருமை
மல் > மய்> மை = கருமை
மல்> மால் = கருமை
மால் வண்ணன் = கருமை நிறத்தவன்.
மால் > மாலை = கரிய , இருள்
மால்> மாலன் = கரிய நிறத்தன்
மாலன்> மாலவன் = கரியன்.

மால்> மார் > மாரி = கரிய நிற முகில், அதனின்று பொழியும் மழை.

மழை மக்கள் வாழ்வுக்கு இன்றியமையாததாகையால் அதனை

தெய்வமெனப் போற்றினர். அதன் நிமித்தமாகவே மாரியம்மன் என்றனர். இதனால் ஆண்பால் பெண்பால் பெயர்கள் அமைந்தன எனலாம்.

காட்டு : மாரியம்மை, மாரியாயி, மாரியப்பன், மாரியாத்தாள்

மால் > மாய் > மாயோன் = மழை முகில் சூழ்ந்த இயற்கைத் தன்மையை உணர்த்தும் உருவகம். இது முல்லை நிலத்து இயற்கையை உணர்த்தும் முதற்பொருளாகும்.

முருகன், குமரன்

இச்சொல் இளமைப் பொருளை உணர்த்துவதே. இளமை, மென்மையும், அழகும், மறமும் நிரம்பியது.

தோற்றப் பொருளை உணர்த்தும் உல் எனும் வேரினின்று இச்சொல் ஆகியது.

உல் > முல் > முள் > முர் > முருகு = இளமை, அழகு
முருகு > முருகன் = இளையன், அழகன்

காலை இளஞ்சூரியன் இளமையானது, மென்மை ஒளி வழங்குவது. இவ்விளஞ் சூரியனால் இளங்கதிர் குழந்தைப் பொருளில் சேய் எனப்பட்டது. எனவே முருகனுக்கும் சேய் செம்மைப் பொருளிலிருந்து மகவுப் பொருளை எட்டியது.

முருகு மக்கட் பெயருக்கும் ஆண்பால் பெண்பால் பின்னொட்டு பெற்று விரிந்தது.
காட்டு :
முருகப்பன், முருகப்பா, முருகையன், முருகையா, முருகாண்டி, முருகவேள், முருகம்மாள், முருகாயி

இவ்வாறே குமரன் எனுஞ் சொல்லும் இளமைப் பொருளைத் தருவதாகும். ஆனால் இது திரட்சி எனும் சேர்தல் பொருளிலிருந்து தோற்றம் பெற்றது.
உல்> குல்> கும் = சேர்தல் பொருள் வேர்.
கும் > குமரன் = உடல் திரட்சிப் பெற்ற இளையன்.

இளையர், இளைமையால் உடல் திரண்டு வலிமை பெற்றிருப்பர். எனவே இளையரைக் குமரன் என்பது வழக்கு. இது இளையனாகிய முருகனையும் குறித்தது. இஃதும் ஆண்பால் பெண்பால் மக்கட் பெயர்களுக்கும் விரிந்தது.

காட்டு : குமரன், குமரப்பன், குமரையன், குமரையா, குமரி, குமரம்மாள்

வாரணன், வருணன்

வருணன் மேய பெருமணல் உலகமும் எனும் தொல்காப்பிய வரியில் வரும் வருணன் எனுஞ் சொல்லும் தூய தமிழ்ச்சொல்லே.

உல் > அள் > வள் எனும் வளைவுப் பொருளில் விரிந்தமைந்த சொல்லே வாரணனும் வருணனும் ஆகும்.

இச்சொல் கடலும் கடல் சார்ந்த நிலத்தின் முதற் பொருளைக் குறித்த முதற்பொருளாகும். இவ்விடத்தில் கடல் மக்கள் வாழ்வுக்கு வளஞ் சேர்ப்பதாகும். கடலுக்கு வளைதல் பொருளில் அமைந்த வாரி எனும் மற்றொரு சொல்லும் உண்டு.

வள் > வர் > வார் > வாரி. விரிந்து வளைந்து கிடக்கும் பெருங்கடல்.

வள் >வர் >வார் > வாரணன் . கடலின் இயற்கை முதல்.

வள் >வர் > வருணன் = வளைந்த வாரி எனும் முதற்பொருள். இது வடக்கில் பலவாறு திரிக்கப் பெற்றது.

இவ்வாறு பல்வேறு தெய்வப் பெயர்கள் எனக் கருதப்படுவன தமிழாயும் நுட்பப் பொருளை உணர்த்துவனவாயும் உள்ளன. இவற்றைக் காய்தல் உவத்தல் இன்றி ஆய்ந்து வடக்கு சார் தாக்கத்தினின்றும் விலக்கி தெளிவுபடுத்த வேண்டியது இன்றியமையாதது. பாவாணர் காட்டிய வேரியல் பலவற்றுக்கும் விடிவாய் அமையும் என்பது திண்ணம்.

# திருக்குறளில் மோனைத் தொடை!

சென்ற இதழின் தொடர்ச்சி....



புலவர் வெற்றியழகன்
தலைவர்,
தொல்காப்பியர் தமிழ்ச்சங்கம், சென்னை

2. பொழிப்புமோனை

பொழிப்பு மோனை என்பது – நான்கு சீர்களைக் கொண்ட அடியில் – முதற் சீரிலும் மூன்றாவது சீரிலும் முதலெழுத்து ஒன்றிவருதலாகும். பொழிப்பு என்றால் பெருமை, சிறப்பு, மேன்மை என்றெல்லாம் பொருளுண்டு.

எ.டு.: செந்தமிழ் ஒன்றே செம்மொழி யாகும்.

திருக்குறளில் பொழிப்பு மோனை

பொழிப்பு மோனையினைத் திருவள்ளுவர் பயன்படுத்தித் திருக்குறளுக்குச் சேர்த்துள்ள சிறப்பினைக் காண்போமாக.

மலர்மிசை ஏகினான் மாணடி – (குறள்.3)
பொறிவாயில் அய்ந்தவித்தான் பொய்தீர் – (குறள்.6)
தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் – (குறள்.7)
கோளிற் பொறியிற் குணமிலவே – (குறள்.9)
சிறப்பொடு பூசனை செல்லாது – (குறள்.18
துறந்தார் பெருமை துணைக்கூறின் – (குறள்.22)
இருமை வகைதெரிந்(து) ஈண்டு – (குறள்.23)
உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் – (குறள்.24)
அந்தணர் என்போர் அறவோர் – (குறள்.30)
அன்றறிவாம் என்னா(து) அறஞ்செய்க – (குறள்.36)
இல்வாழ்வா னென்பான் இயல்புடைய – (குறள்.41)
ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா – (குறள்.48)
அல்லவை தேய அறம்பெருகும் – (குறள்.96)
இனிய உளவாக இன்னாத – (குறள்.100)
நன்றே தரினும் நடுவிகந்தாம் – (குறள்.113)
வாணிகம் செய்வார்க்கு வாணிகம் – (குறள்.120)
அழுக்கா றுடையார்க்(கு) ஆக்கம் – (குறள்.135)
நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் – (குறள்.138)
எனைத்துணையர் ஆயினும் என்னாம் – (குறள்.144)
பகைபாவம் அச்சம் பழியென – (குறள்.146)
பிறன்மனை நோக்காத பேராண்மை – (குறள்.148)
நலக்குரியார் யாரெனில் நாமநீர் – (குறள்.149)
ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் – (குறள்.161)
அழுக்கா றுடையார்க்(கு) அதுசாலும் – (குறள்.165)
அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் – (குறள்.169)
படுபயன் வெஃகிப் பழிப்படுப – (குறள்.172)
அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் – (குறள்.179)
அறஞ்சொல்லு நெஞ்சத்தான் அன்மை – (குறள்.185)
துன்னிய குற்றமும் தூற்றும் – (குறள்.188)
பல்லார் முனியப் பயனில – (குறள்.191)
அருங்கேடன் என்ப(து) அறிக – (குறள்.210)
கைம்மாறு வேண்டா கடப்பாடு (குறள்.211)
ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் – (குறள்.214)
பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் – (குறள்.216)
மருந்தாகித் தப்பா மரத்தற்றால் – (குறள்.217)
தோன்றின் புகழொடு தோன்றுக – (குறள்.236)
தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது – (குறள்.251)
உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் – (குறள்.261)
ஒன்னார்த் தெறலும் உவந்தாரை – (குறள்.264)
வலியில் நிலைமையான் வல்லுருவம் – (குறள்.273)
பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் – (குறள்.275)
அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் – (குறள்.286)
அளவறிந்தார் நெஞ்சத்(து) அறம்போல – (குறள்.288)
பொய்யாமை அன்ன புகழில்லை – (குறள்.296)
செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் – (குறள்.301)

இணரெரி தோய்வன்ன இன்னா – (குறள்.308)
கறுத்தின்னா செய்தவக் கண்ணும் – (குறள்.312)
தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் – (குறள்.318)
நில்லாத வற்றை நிலையின – (குறள்.331)
இயல்பாகும் நோன்பிற்கொன்(று) இன்மை – (குறள்.344)
பொருளல்ல வற்றைப் பொருளென் – (குறள்.351)
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் –(குறள்.356)
வேண்டாமை யன்ன விழுச்செல்வம் – (குறள்.363)
அற்றவர் என்பார் அவாவற்றார் – (குறள்.365)
அஞ்சுவ தோரும் அறனே – (குறள்.366)
ஆகூழால் தோன்றும் அசைவின்மை – (குறள்.371)
இருவே றுலகத்(து) இயற்கை – (குறள்.374)
பரியினும் ஆகாவாம் பாலல்ல – (குறள்.376)
அஞ்சாமை ஈகை அறிவூக்கம் – (குறள்.382)
கொடையளி செங்கோல் குடியோம்பல் – (குறள்.390)
அரங்கின்றி வட்டாடி அற்றே – (குறள்.401)
கல்லாதான் ஒட்பம் கழியநன் – (குறள்.404)
சென்ற இடத்தாற் செலவிடாத் – (குறள்.422)
வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை – (குறள்.435)
அறனறிந்து மூத்த அறிவுடையார் – (குறள்.441)
உற்றநோய் நீக்கி உறாஅமை – (குறள்.442)
அரியவற்று ளெல்லாம் அரிதே – (குறள்.443)
தம்மிற் பெரியார் தமரா – (குறள்.444)
தக்கார் இனத்தனாய்த் தானொழுக – (குறள்.446)
மனநலத்தின் ஆகும் மறுமைமற் – (குறள்.459)
அமைந்தாங் கொழுகான் அளவறியான் – (குறள்.474)
உளவரை தூக்காத ஒப்புர – (குறள்.480)
பொள்ளென ஆங்கே புறம்வேரார் – (குறள்.487)
எய்தற் கரிய(து) இயைந்தக்கால் – (குறள்.489)
தேரான் பிறனைத் தெளிந்தான் – (குறள்.508)
வாரி பெருக்கி வளப்படுத் – (குறள்.512)
அன்பறிவு தேற்றம் அவாவின்மை – (குறள்.513)
அறிந்தாற்றிச் செய்கிற்பாற்(கு) அல்லால் – (குறள்.515)
பொச்சாப்புக் கொல்லும் புகழை – (குறள்.532)
பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை – (குறள்.533)
ஆபயன் குன்றும் அறுதொழிலோர் – (குறள்.560)
தக்காங்கு நாடித் தலைச்செல்லா – (குறள்.561)
வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் – (குறள்.563)
செருவந்த போழ்தின் சிறைசெய்யா – (குறள்.569)
கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோல் – (குறள்.570)
கண்ணிற்(கு) அணிகலம் கண்ணோட்டம் – (குறள்.575)
மண்ணோ டியைந்த மரத்தனையர் – (குறள்.576)
கருமஞ் சிதையாமல் கண்ணோட – (குறள்.578)
வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் – (குறள்.584)
கடாஅ உருவொடு கண்ணஞ்சாதி – (குறள்.585)
உடைய ரெனப்படுவ(து) ஊக்கமஃ – (குறள்.591)
ஆக்க மிழந்தோமென்(று) அல்லாவார் – (குறள்.593)
உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் – (குறள்.596)
குடியாண்மை யுள்வந்த குற்றம் – (குறள்.609)
அருமை யுடைத்தென்(று) அசாவாமை – (குறள்.611)
அடுக்கி வரினும் அழிவிலான் – (குறள்.625)
இலக்கம் உடம்பிடும்பைக்(கு) என்று – (குறள்.627)
பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் – (குறள்.639)
முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே – (குறள்.640)
நாநல மென்னும் நலனுடைமை – (குறள்.641)
ஆக்கமும் கேடும் அதனால் – (குறள்.642)
ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் – (குறள்.653)
இடுக்கண் படினும் இளிவந்த – (குறள்.654)
அழக்கொண்ட எல்லாம் அழப்போம் – (குறள்.659)
சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் – (குறள்.671)
முடிவும் இடையூறு முற்றியாங் – (குறள்.676)
போற்றின் அரியவை போற்றல் – (குறள்.693)
வேட்பன சொல்லி வினையில – (குறள்.697)
கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத – (குறள்.699)
பழையம் எனக்கருதிப் பண்பல்ல – (குறள்.700)
கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் –

(குறள்.701)
அய்யப் படாஅ(து) அகத்து – (குறள்.702)
நன்றென் றவற்றுள்ளு நன்றே – (குறள்.715)
ஆற்றின் நிலைதளர்ந்(து) அற்றே – (குறள்.716)
அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் –
(குறள்.720)
பல்லவை கற்றும் பயமிலரே – (குறள்.728)
உளரெனினும் இல்லாரோ(டு) ஒப்பர் –
(குறள்.730)
பொருளல் லவரைப் பொருளாகச் – (குறள்.751)
ஒலித்தக்கால் என்னாம் உவரி – (குறள்.736)
கூற்றுடன்று மேல்வரினுங் கூடியெதிர் –
(குறள்.765)
நகுதற் பொருட்டன்று நட்டல் – (குறள்.784)
ஊதியம் என்ப(து) ஒருவற்குப் – (குறள்.797)
கெடுங்காலைக் கய்விடுவார்க் கேண்மை –
(குறள்.799)
பேதைமை ஒன்றோ பெருங்கிழமை –
(குறள்.805)
பருகுவார் போலினும் பண்பிலார் – (குறள்.811)
உறின்நட் டறினொரூஉம் ஒப்பிலார் – (குறள்.
812)
நகைவகைய ராகிய நட்பின் – (குறள்.817)
ஒல்லுங் கருமம் உடற்று – (குறள். 818)
பேதைமை யுள்ளெல்லாம் பேதைமை –
(குறள்.832)
பொய்படும் ஒன்றோ புனைபூணும் – (குறள்.836)
அருமறை சோரும் அறிவிலான் – (குறள்.847)
இகலின் மிகலினி(து) என்பவன் – (குறள்.856)
நீங்கான் வெகுளி நிறையிலன் – (குறள்.864)
ஏமுற் றவரினும் ஏழை – (குறள்.873)
பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை –
(குறள்.874)
மனையாளை அஞ்சும் மறுமய் – (குறள்.904)
உட்கப் படாஅர் ஒளியிழப்பர் – (குறள்.921)
உண்ணற்க கள்ளை உணிலுண்க –
(குறள்.922)
களித்தறியேன் என்பது கய்விடுக – (குறள்.928)
சிறுமை பலசெய்து சீரழிக்கும் (குறள். 934)
பழகிய செல்வமும் பண்பும் – (குறள்.937)
இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் –
(குறள்.946)
குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் –
(குறள்.957)
மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை –
(குறள்.968)
இன்னாசெய் தார்க்கும் இனியவே –
(குறள்.987)
இன்மை ஒருவர்க்(கு) இளிவன்று –
(குறள்.988)
நண்பாற்றா ராகி நயமில – (குறள்.998)
அன்பொரீஇத் தற்செற்(று) அறம்நோக்காது –
(குறள்.1009)
சீருடைச் செல்வர் சிறுதுனி – (குறள்.1010)
ஊணுடை எச்சம் உயிர்க்கெல்லாம் –
(குறள்.1012)
ஊனைக் குறித்த உயிரெல்லாம் – (குறள்.1013)
கருமம் செயவொருவன் கய்தூவேன் –
(குறள்.1021)
குற்றம் இலனாய்க் குடிசெய்து – (குறள்.1025)
ஏரினும் நன்றாம் எருவிடுதல் – (குறள்.1038)
இலமென் றசைஇ இருப்பாரைக் – (குறள்.1040)
கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் – (குறள்.1053)
கரப்பிடும்பை இல்லாரைக் காணின் –
(குறள்.1056)
அச்சமே கீழ்கள(து) ஆசாரம் – (குறள்.1075)
பண்டறியேன் கூற்றென் பதனை –
(குறள்.1083)
பிணிக்கு மருந்து பிறமன் – (குறள்.1102)
தம்மில் லிருந்து தமதுபாத் – (குறள்.1107)
காணின் குவளை கவிழ்ந்து – (குறள்.1114)
அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் –
(குறள்.1117)
அலர்நாண ஒவ்வதோ அஞ்சல் – (குறள்.1149)
அரிதரோ தேற்றம் அறிவுடையார் – (குறள்.1153)
வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா – (குறள்.1179)
உள்ளுவன் மன்யான் உரைப்ப – (குறள்.1184)
புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் –
(குறள்.1187)
நாம்காதல் கொண்டார் நமக்கெவன் –
(குறள்.1195)
நினைப்பவர் போன்று நினையார்கொல் –
(குறள்.1203)
மற்றுயான் என்னுளேன் மன்னோ –
(குறள்.1206)
விளியுமென் இன்னுயிர் வேறல்லம் –
(குறள்.1209)
கனவினான் உண்டாகுங் காமம் – (குறள்.1214)
மாலையோ அல்லை மணந்தார் – (குறள்.1221)
மாலைநோய் செய்தல் மணந்தார் – (குறள்.1226)
சிறுமை நமக்கொழியச் சேண்சென்றார் –
(குறள்.1231)
நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே –
(குறள்.1241)

காமம் எனவொன்றோ கண்ணின்றென் – (குறள்.1252)
பன்மாயக் கள்வன் பணிமொழி – (குறள்.1258)
புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் – (குறள்.1259)
நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க் – (குறள்.1260)
காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் – (குறள்.1265)
தண்ணந் துறைவன் தணந்தமை – (குறள்.1277)
கண்ணின் துனித்தே கலங்கினாள் – (குறள்.1290)
பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு – (குறள்.1295)
துன்பத்திற்கி யாரே துணையாவார் – (குறள்.1299)
புல்லா திராஅப் புலத்தை – (குறள்.1301)
ஊடி யவரை உணராமை – (குறள்.1304)
நோதல் எவன்மற்று நொந்தாரென் – (குறள்.1308)
புல்லி விடாஅப் புலவியுள் – (குறள்.1324)
தவறில ராயினுந் தாம்வீழ்வார் – (குறள்.1325)
ஊடுக மன்னோ ஒளியிழை – (குறள்.1329)

3. ஒரூஉ மோனை

ஒருவுதல் என்றால் நீங்குதல் என்று பொருள். அடியின் முதற்சீரிலும் இறுதிச் சீராகிய நான்காவது சீரிலும் மோனைகள் அமைந்து – இடையில் இரண்டாவது சீரிலும் மூன்றாவது சீரிலும் மோனை நீங்கி இருத்தலாகும்.

எ.டு. : குறளுக் கிணைநூல் யாதெனில் குறளே

திருக்குறளில் ஒரூஉ மோனை

திருக்குறளில் நம் அய்யன் திருவள்ளுவர் ஒரூஉ மோனையை எவ்வாறு சிறப்பாக எத்தனை குறள்களில் பயன்படுத்தி நம்மைத் துய்க்கவைத்திருக்கிறார் என்பதனைப் பார்ப்போமாக.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி – (குறள்.1)
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து – (குறள்.28)
ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே – (குறள்.33)
அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும் – (குறள்.49)
மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை – (குறள்.52)
மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர் – (குறள்.65)
அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார் – (குறள்.72)
அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க் – (குறள்.73)
அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க் – (குறள்.80)
வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி – (குறள்.85)
உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா – (குறள்.89)
மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து – (குறள்.90)
செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி – (குறள்.112)
ஒன்றானுந் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின் – (குறள்.126)
ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம் – (குறள்.131)
சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே – (குறள்.173)
ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம் – (குறள்.215)
பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந் – (குறள்.227)
தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின் – (குறள்.249)
பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த – (குறள்.292)
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறிது – (குறள்.327)
அற்கா இயல்பிற்று செல்வம் அதுபெற்றால் – (குறள்.333)
நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை – (குறள்.335)
உறங்கு வதுபோலும் சாக்கா(டு) உறங்கி – (குறள்.339)
பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப் – (குறள்.347)
ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு – (குறள்.398)
கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன் – (குறள்.403)
செவிக்குண வில்லாத போழ்து சிறிது – (குறள்.412)
எதிரதாக் காக்கும் அறிவினார்க்(கு) இல்லை –

(குறள்.429)
அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார் – (குறள்.430)
குற்றமே காக்க பொருளாகக் குற்றமே – (குறள்.434)
சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான் – (குறள்.451)
ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ஓடிப் – (குறள்.579)
உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து – (குறள்.598)
முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை – (குறள்.616)
கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் – (குறள்.643)
உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க் – (குறள்.667)
துன்பம் உறவரினுஞ் செய்க துணிவாற்றி – (குறள்.669)
ஒல்லுவா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால் – (குறள்.673)
கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால் – (குறள். 686)
மன்னர் விழைப விழையாமை மன்னரால் – (குறள்.692)
எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும் – (குறள்.746)
கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை – (குறள்.796)
கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற – (குறள்.845)
தன்துணை யின்றால் பகையிரண்டால் தானொருவன் – (குறள்.875)
வகையறிந்து தன்செய்து தன்காப்ப மாயும் – (குறள்.878)
உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து – (குறள்.883)
ஏந்திய கொள்கையார் சீரின் இடைமுரிந்து – (குறள்.899)
இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற்(று) எஞ்ஞான்றும் – (குறள்.905)
இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள் – (குறள்.906)
அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார் – (குறள்.911)
தந்நலம் பாரிப்பார் தோயார் தலைசெருக்கிப் – (குறள்.916)
ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கும் உண்டாங்கொல் – (குறள்.932)
மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின் – (குறள்.945)
கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து – (குறள்.981)
நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள் – (குறள்.1008)
அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்(கு) அஃதின்றேல் – (குறள்.1014)
நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள் – (குறள்.1049)
கரப்பிலார் வையகத் துண்மையான் கண்ணின்று – (குறள்.1055)
இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக் – (குறள்.1064)
கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தின் – (குறள்.1092)
மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல் – (குறள்.1118)
பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி – (குறள். 1121)
மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற – (குறள்.1136)
துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு – (குறள்.1165)
கதுமெனத் தான்நோக்கித் தாமே கலுழும் – (குறள்.1173)
காதலர் தூதொடு வந்த கனவினுக்கி – (குறள்.1211)
கயலுண்கண் யானிரப்பத் துஞ்சின் கலந்தார்க் – (குறள்.1212)
அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன் – (குறள்.1228)
பிரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர் – (குறள்.1248)
உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ – (குறள்.1249)
மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை – (குறள்.1273)
இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக் –

# நீலம்

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"ஒரே முறைதான் உன்னோடு பேசிப் பார்த்தேன்
நீ ஒரு தனிப்பிறவி
ஒரே மயக்கம் அம்மம்மா போதும் போதும் ஏன்
இனி மறுபிறவி

வானம் பார்த்த பூமியின் மேலே மழை என
விழுந்தாயே
நீலம் பூத்த விழிகளினாலே நீ எனை
அழைத்தாயே"
(கண்ணதாசன், தனிப்பிறவி)

****

"நீல் நிற விசும்பின் மலி துளி பொழிய ஒரு கை"
(திருமுருகாற்றுப்படை: 116)

"நெடும் பெரும் சிமையத்து நீலப் பைம் சுனை"
(மேலது: 253)

"நீல் நிற முல்லைப் பல் திணை நுவல"
(பொருநராற்றுப்படை: 221)

"நீலம் நாகம் நல்கிய கலிங்கம்"
(சிறுபாணாற்றுப்படை: 96)

"நீலத்து அன்ன பைம் பயிர் மிசை தொறும்"
(மதுரைக்காஞ்சி: 279)

"நீல்நிற வண்ணனும் போன்ம்"
(கலித்தொகை 104: 38)

"கண் போல் நீலம் சுனை தொறும் மலர"
(நற்றிணை 161: 2)

"நீல மணி மிடற்று ஒருவன் போல"
(புறநானூறு 91: 6)

இப்படிச் சங்க இலக்கியத்தில் ஏறத்தாழ எண்பது பாடல்களில் நீல் – நீலம் எனும் சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது.

"முகம் தாமரை முறுவல் ஆம்பல் கண் நீலம்
இகந்து ஆர் விரல் காந்தள் என்று என்று
உகந்து இயைந்த"
(திணைமாலை நூற்றைம்பது 72: 1 – 2)

"தாமரையும் நீலமும் தைவந்து யாமத்து"
(முத்தொள்ளாயிரம் 41: 2)

"கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகம் கருக
நீல நிறமயிர்க்கால் நின்று எறிப்ப – நூல்
என்னத்
தோன்றாத நுண் மருங்குல் தோன்றச் சுரி
குழலாள்
ஈன்றாள் குழவி இரண்டு."
(நளவெண்பா 208)

"நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து,
நிலாவென்று காட்டுகின்றாய் ஒளி முகத்தைக்
கோல முழுதும் காட்டிவிட்டால் காதற்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ?"
(பாவேந்தர், புரட்சிக்கவி).

"நீலச் சாயம் வெளுத்துப் போச்சு
ராசா வேசம் கலஞ்சி போச்சு" என்பது நாடறிந்த பாடல்.

சங்கக் காலம் முதல் இன்றுவரை புலவர்கள் நீலம் என்பதைப் பாடல்களில் கையாண்டு வருகின்றனர்.

இலக்கணத்தில் கடைக்குறைக்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுவதும், நாம் பள்ளியில் படித்ததும்:
'நீலுண் துகிலிகை'.
'நீல்' என்பது 'நீலம்' என்பதன் கடைக்குறை.

இதையே மறுதலையாக எண்ணிப் பார்த்தால் 'நீல்' என்பது 'அம்' என்னும் பின்னொட்டுப் பெற்று 'நீலம்' ஆகியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

ஒ. நீ. : தால் – தாலம் = தட்டு.

ஆல் – ஆலம் = அகலம், ஆல மரம்.

வட்டு – வட்டம்; கம்பு – கம்பம் = தூண்.

கால் + இ = காலி, காற்றுடையது – காலி அடைப்பி; கால் உடையது – கன்று காலிகள்.

சூல் + இ = சூலி, நிறை சூலி = நிறைமாதக் (கருப்பினி) கருப்பம் உடையவள்.

வால் + இ = வாலி, வாலியோன் = வெண்மையானவன் – பலராமன். 'வளையொடு புரையும் வாலியோற்கு'

(பரிபாடல் 2: 20).

நீல் + இ = நீலி அவுரி, நீலச் சாயம் எடுக்கப் பயன்படும் செடி. இதை indigo என்பர்.

நுணா (மஞ்சணத்தி)விலிருந்து மஞ்சட் சாயமும், அவுரியிலிருந்து நீலச் சாயமும் எடுத்துவந்தனர்.

[ indigo – indico – India = கருப்பு நிறமுடையோர் வாழ்ந்த நிலப்பகுதி. வணிகத்தொடர்பில் இங்கு வந்த அயல்நாட்டினர் (கிரேக்கம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டில்) இந்தியா எனப் பெயர் சூட்டினர் என்பது அண்மையில் மறைந்த ஆழ்கடல் ஆய்வாளர் திரு ஒரிசா பாலுவின் கருத்து.]

indigo என்பதை ஊதா என்றோ கருநீலம் என்றோ அழைப்பர்.

canine, pristine, feminine, asinine, crystalline, equine, marine, doctrine, famine, routine,... போல நீலத்தைக் குறித்த 'நீல் – nil' என்னும் சொல் al என்னும் (சுட்டிடை) முன்னொட்டும் –ine என்னும் பெயரடைப் பின்னொட்டும் பெற்று aniline ஆகியுள்ளது.

நீல் > நீலம் > நீலி எனச் சங்கத் தமிழ்ச் சொல்லிருக்கவும் நீலச் சாயத்தைக் குறிக்கும் nil (நீல்) என்பதன், பாரசீகச் சொல்லின், மூலமாக நீலி என்னும் சங்கதச் சொல்லை மூலமாகக் கூறுவது அவர்கள் தமிழ் அறியாததாலேயே.

நீல் > nil > al nil ine > aniline!

aniline (n.)

chemical base used in making colorful dyes, 1843, coined 1841 by German chemist Carl Julius Fritzsche and adopted by Hofmann, ultimately from Portuguese anil "the indigo shrub," from Arabic an-nil "the indigo," assimilated from al-nil (with Arabic definite article al-), from Persian nila, ultimately from Sanskrit nili "indigo," from nilah "dark blue."

With suffix -ine indicating "derived substance" (see -ine (1); also see -ine (2) for the later, more precise, use of the suffix in chemistry). Discovered in 1826 in indigo and at first called crystallin; it became commercially important in 1856 when mauve dye was made from it. As an adjective from 1860.

indigo (n.)

17c. spelling change of indico (1550s), "blue powder obtained from certain plants and used as a dye," from Spanish indico, Portuguese endego, and Dutch (via Portuguese) indigo, all from Latin indicum "indigo," from Greek indikon "blue dye from India," literally "Indian (substance)," neuter of indikos "Indian," from India (see India).

Replaced Middle English ynde (late 13c., from Old French inde "indigo; blue, violet" (13c.), from Latin indicum). Earlier name in Mediterranean languages was annil, anil (see aniline). As "the color of indigo" from 1620s. As the name of the violet-blue color of the spectrum, 1704 (Newton).

*****

# திருக்குறளில் 'பெள்' – சூழல் கருத்தாய்வு



முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

அற இலக்கியமான திருக்குறள் மொழி மற்றும் இலக்கியத் தொழில்நுட்பத்தைச் செவ்வனே கையாண்டு படைக்கப்பட்டுள்ளது. வாழ்வியல் விழுமியங்களை விண்டுரைப்பதை முதன்மை நோக்கமாகக் கொண்டிருப்பினும், இலக்கண/இலக்கியவியல் உத்திகளும் நடையியல் நுட்பங்களும் திருக்குறளில் செறிந்து காணப்படுகின்றன. காலப் பழமையாலும் திருக்குறளின் இலக்கண / தொடர் அமைப்பு நுட்பங்களாலும் சில குறட்பாக்களுக்கு எளிமையாகப் பொருளுணர இயல்வதில்லை. குறட்பாக்களை முறையாகவும் முழுமையாகவும் உணர்ந்துகொண்டால் படைப்பின் பெருமையும் விளம்பப்படுகின்ற விழுமியத்தின் சால்பும் தெளிவாகி, அறநெறியைப் பின்பற்றும் இயல்பார்வம் பிறக்கும். அதனால் திருக்குறளை முறையாக உணர்ந்துகொள்ள இலக்கண அமைப்புகளின் பொருண்மைத் தகைமையை அறிவது தேவையாகின்றது.

குறட்பாக்களின் புரிதிறனில் உள்ள கடினத் தன்மை / மருட்சி ஆகியவற்றை நீக்க இத்தகைய பொருண்மையியல் அணுகுமுறை உறுதுணையாகும். சான்றாக, திருக்குறளில் ஆளப்பட்டுள்ள பெள் என்பதை அடியாகக் கொண்ட சொற்களைக் கருதலாம். இச் சொற்கள் பெயராகவும் வினையடையாகவும் ஆளப்பட்டுள்ளன. அமைப்புச் சூழலுக்கேற்பவும் தொடர்ப் பொருண்மை நோக்கிலும் இத்தகைய சொற்களை நுணுகி ஆராய்ந்து கருத்துணரவேண்டும். இக் கட்டுரை பெட்டு என்னும் சொல்லை மாறுபட்ட பல கருத்துகளில் திருவள்ளுவர் ஆண்டுள்ளதை விளக்குவதாக அமைகின்றது. சொல், தொடர்ப் பொருண்மை நோக்கில் அணுகினால் விழுமியங்களைத் தெளிவாக அறியலாம் என்பது இவண் கருதுகோளாகும்.

## பெள் :

அடிப்படையில் பெறுதல்; விரும்புதல்; அடைய முயல்தல் என்னும் பொருளில் இச் சொல் இயல்கின்றது. பேச்சு வழக்கிலும் தெலுங்கு மொழியிலும் பெற்றுக்கொள்தல் என்னும் கருத்தில் பெட்டு என்றுஆளப்படுகின்றது. பின்வரும் குறட்பாக்களில்,

பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல் (141)

[பெட்டு = விழைந்து; வினையெச்சம்]

பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு ( 732 )

[பெட்டக்கது = விரும்பப்படுகின்ற  பொருள்; வினையாலணையும்பெயர்]

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர் (908)

[ பெட்டாங்கு= விரும்பியவாறு – வினையெச்சம் ]

பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணாது அமைவில கண்(1178)

[பெட்டார்= விழைந்தவர் ; வினையாலணையும்பெயர் ]

நாணென ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின்(1257)

[பெட்ப – விரும்பியவற்றை ;  வினையாலணையும்பெயர்]

பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து(1276)

[பெட்ப – விரும்பியவாறு ;  வினையெச்சம்]

பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணா தமையல கண் (1283)

[பெட்ப – விரும்பியவற்றை ;  வினையாலணையும்பெயர்]

கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல் (1293)

[பெட்ட – விரும்பியவாறு ;  வினையெச்சம்]

இவ்வாறாக, விரும்பல், விழைதல்  என்னும் பொருளுடைய 'பெள்' என்னும் அடிச்சொல் வினையடையாகவும் வினையாலணையும் பெயராகவும்  இயல்வதை அறியலாம்.

இலக்கியத் தொடர்களில் பயில்கின்ற சொற்களைச் சூழல் நோக்கிக் கருத்துணர்ந்தால் புரிதிறன் சீராகும்; படைப்பின் பயனை முழுமையாக நுகரலாம்.

பயன்பட்டவை

https://www.ytamizh.com/thirukural/kural

(http://tamilconcordance.in)

***********

# செய்தி நறுக்குகள்

## தொல்காப்பியர் பிறந்தநாள் விழா





தொல்காப்பியரின் பிறந்த தினத்தையொட்டி, சென்னை காமராசர் சாலை மெரீனா கடற்கரையில உள்ள சென்னைப பல்கலை இணைப்ப கட்டட வளாகத்தில
அவரது சிலைக்கு கீழே அலங்கரித்து வைக்கப்பட்டிருந்த உருவப் படத்துக்கு தமிழக அரச சாா்பில் செவ்வாய்க்கிழமை மரியாதை செலுத்திய
தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறைச் செயலா் இல.சுப்பிரமணியன், செய்தி மக்கள் தொடா்புத் துறை இயக்குநா் இரா.வைத்திநாதன.
தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள் உள்ளிட்ட உயர் அலுவலா்கள

## இளங்கோவடிகளைப் போற்றும் விழா



சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகளை போற்றும் வகையில் சென்னை அண்ணா சதுக்கத்தில் அமைந்துள்ள அவரது சிலைக்கு கீழே அலங்கரித்து
வைக்கப்பட்டிருந்த உருவப் படத்துக்கு தமிழக அரசு சார்பில் புதன்கிழமை மரியாதை செலுத்திய தமிழ் வளர்ச்சி - செய்தித் துறைச் செயலர் இல.சுப்பிரமணியன்
செய்தி மக்கள் தொடர்புத் துறை இயக்குநர் இரா.வைத்திநாதன், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள் உள்ளிட்ட உயர் அலுவலர்கள்.

## கால்டுவெல் பிறந்தநாள் விழா



திராவிட மொழிகளின் ஒப்பியல் அறிஞர் ராபர்ட் கால்டுவெல்–லின் 210–ஆவது பிறந்த நாளையொட்டி, சென்னை
காமராஜர் சாலையில் உள்ள அவரது சிலைக்கு அருகில் உள்ள உருவப்படத்துக்கு தமிழ்நாடு அரசின் சார்பில்
செவ்வாய்க்கிழமை மரியாதை செலுத்திய செய்தித் துறை செயலர் ல.சுப்பிரமணியன், செய்தி மக்கள் தொடர்புத் துறை
இயக்குநர் ரா.வைத்திநாதன், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள் உள்ளிட்டோர்.